ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව ] முழுப் பதிப்புரிமையுடையது ]All Rights Reserved]

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

85 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

ගෘහ ආර්ථික විද්‍යාව I, II
மனைப் பொருளியல் I, II
Home Economics I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## மனைப் பொருளியல் I

**கவனிக்க:**

(i) எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
(iii) உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.
(iv) அவ்விடைத்தாளின் பிற்பக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** தானியங்களில் அடங்கியுள்ள காபோவைதரேற்று
(1) பெக்ரின் (2) இனியுலின் (3) அமைலோ பெக்ரின் (4) இலிக்னின்

**2.** கொழுப்புகளின் தொழிற்பாடுகள் இரண்டு
(1) நொதியங்களின் தொகுப்பும் நோய் எதிர்ப்புச் சக்தியைப் பெற்றுக் கொடுத்தலும்
(2) நோய் எதிர்ப்புச் சக்தியைப் பெற்றுக்கொடுத்தலும் சக்தியை உற்பத்தி செய்தலும்
(3) நொதியங்களின் தொகுப்பும் உடல் வெப்பநிலையைக் கட்டுப்படுத்தலும்
(4) உடல் வெப்பநிலையைக் கட்டுப்படுத்தலும் சக்தியை உற்பத்தி செய்தலும்

**3.** புரதம் தொடர்பான சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன. இவற்றுள் **பிழையான** விடயம் யாது?
(1) அதன் அமைப்பில் நைதரசன் அடங்கியுள்ளது. (2) அதன் மிகையளவு ஈரலில் களஞ்சியப்படுத்தப்படும்.
(3) விலங்குப் புரதங்கள் தரம் கூடியன. (4) சக்திப் பெறுமானம் 4 கிலோகலோரி / கிராம் ஆகும்.

**4.** விற்றமின் A இன் ஒரு தொழிற்பாடு
(1) கல்சியம் அகத்துறிஞ்சலைத் துரிதப்படுத்தல் (2) தெளிவான பார்வையை வழங்குதல்
(3) குருதி உறைதலுக்கு உதவுதல் (4) தசை இயக்கத்தைக் கட்டுப்படுத்தல்

**5.** 'X' என்னும் விற்றமின் தொடர்பான சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன.
- நீரில் கரையும்.
- ஒட்சியேற்றமடையும்.
- நோய் எதிர்ப்புச் சக்தியைப் பெற்றுத்தரும்.
- இரும்பு அகத்துறிஞ்சலுக்கு உதவும்.

'X' ஆக இருக்கக்கூடியது
(1) விற்றமின் C (2) விற்றமின் $B_1$ (3) விற்றமின் $B_2$ (4) விற்றமின் D

**6.** பின்வருவனவற்றுள் பீற்றா கரோட்டின் அதிக அளவு அடங்கியுள்ள உணவுப் பொருள்கள் அடங்கியுள்ள கூட்டம் எது?
(1) கொய்யா, நெல்லி, அன்னாசி (2) போஞ்சி, வாழை, ஆனைக்கொய்யா
(3) வெள்ளரிக்காய், கரட், முள்ளங்கி (4) மஞ்சள் பூசணி, மாம்பழம், பப்பாசி

**7.** என்புகளினதும் பற்களினதும் சிறந்த வளர்ச்சிக்காகத் தொழிற்படும் இரு போசணைப் பொருள்கள்
(1) கல்சியம், விற்றமின் D (2) புரதம், விற்றமின் A
(3) மகனீசியம், விற்றமின் E (4) பொஸ்பரஸ், விற்றமின் K



Department of Examinations Sri Lanka

**8.** பின்வருவனவற்றுள் அதிக சக்தி பெறுமானத்தைக் கொண்ட ஓர் உணவுப்பொருள்
(1) முந்திரிப் பருப்பு (2) அரிசி (3) வெண்ணெய் (4) வற்றாளைக் கிழங்கு

**9.** பருப்பு வகைகளில் அடங்கியுள்ள புரதம்
(1) இலெகியூமின் (2) குளுற்றன் (3) ஜெலற்றின் (4) கேசின்

**10.** உணவு தயாரிப்பின்போது பின்பற்றப்படும் பழக்கவழக்கங்கள் சில கீழே தரப்பட்டுள்ளன. இவற்றுள் **பிழையான** பயிற்சியானது
(1) வெளித்தோலுடன் கிழங்கை அவித்தல்
(2) உணவைச் சமைத்துக் கொண்டிருக்கும் போதே உப்பைச் சேர்த்தல்
(3) வெட்டுவதற்கு முன்னர் மரக்கறிகளைக் கழுவுதல்
(4) சமைப்பதற்கு முன்னர் மீனைப் பதப்படுத்தி வைத்தல்

**11.** கீழே தரப்பட்டுள்ள உணவுவேளைகளுள் இரும்பு, புரதம், விற்றமின் C ஆகியன அதிக அளவு அடங்கும் உணவுவேளை எது?
(1) இடியப்பம், உருளைக்கிழங்கு கறி, சீனி சம்பல், பழப்பானம்
(2) அப்பம், பருப்புக் கறி, வெங்காயச் சம்பல், தேநீர்
(3) பாற்சோறு. மாசி சம்பல், பாற்சொதி, பாற்கோப்பி
(4) பாண், மீன்கறி, வாழைப்பழம், இலைக்கஞ்சி

**12.** தட்டில் வறுப்பதன் மூலம் சமைக்கப்படும் ஓர் உணவு
(1) முட்டை (2) கிழங்கு (3) ரொட்டி (4) கருவாடு

**13.** உணவிலுள்ள நார்களின் ஒரு தொழிற்பாடு
(1) மலம் வெளியேறலை இலகுவாக்கல்
(2) போசணைப் பொருள்களின் அகத்துறிஞ்சலை விரைவுப்படுத்தல்
(3) உணவு சமிபாடடைதலுக்கு உதவுதல்
(4) நொதியங்களின் உற்பத்தியை அதிகரிக்கச் செய்தல்

**14.** மீன்புளித்தீயலைத் தயார்செய்யும்போது **நடைபெறாத** செயல் ஒன்று
(1) செறிவு அதிகரித்தல் (2) pH பெறுமானம் அதிகரித்தல்
(3) புறப்பிரசாரணம் (4) நீர்ச்செயற்பாடு குறைவடைதல்

**15.** உணவு பழுதடைதலுக்கு ஏதுவான ஒரு வெளிக் காரணி
(1) ஆதாரப்படை (2) நொதியச் செயற்பாடு (3) pH பெறுமானம் (4) ஒட்சிசன்

**16.** குறைபாட்டு நோய்களுடன் தொடர்புபட்ட நோய் நிலைமைகள் சில கீழே தரப்பட்டுள்ளன. இவற்றுள் சரியானது எது?
(1) இரும்புக் குறைபாட்டின்போது புண்களைக் காணலாம்.
(2) விற்றமின் A குறைபாட்டின்போது பாதங்கள் விறைப்புக்கு உட்படுவதைக் காணலாம்.
(3) புரதக் குறைபாட்டின் போது வீங்குதல் ஏற்படும்.
(4) விற்றமின் C குறைபாட்டின்போது மலச்சிக்கல் ஏற்படுவதைக் காணலாம்.

**17.** மிகவும் மெலிந்த உடலைக் காணக்கூடியதாயிருப்பது
(1) என்புருக்கி நோயின் போதாகும். (2) பெரிபெரி நோயின் போதாகும்.
(3) மரஸ்மஸ் நோயின் போதாகும். (4) குருதிச்சோகையின் போதாகும்.

**18.** பின்வருவனவற்றுள் முற்பிரசவ விருத்தியுடன் தொடர்புபட்ட சரியான கூற்று எது?
(1) மாதவிடாய்ச் சக்கரத்தின் முதல் ஐந்து நாட்களுள் சூல் விடுவிப்பு நிகழும்.
(2) கர்ப்பப்பையில் உட்பதித்தலின் பின்னர் நுகம் பிரிகையடைதல் ஆரம்பமாகும்.
(3) தாயின் குருதியிலுள்ள பாதிப்பை ஏற்படுத்தும் பதார்த்தங்கள் முதிர்மூலவுருவுக்குக் கடத்தப்படல் சூல்வித்தகம் மூலம் தடுக்கப்படும்.
(4) முற்பிரசவ காலத்தில் இரண்டு கிழமைகளிலிருந்து மூன்று மாதங்கள் வரையுள்ள காலம் முளையப் பருவம் எனப்படும்.

**19.** ஒரு முதிர்ந்த சூல் விடுவிக்கப்பட்ட பின்னர் பொதுவாக உயிரோடு காணப்படுவது
(1) 12 மணித்தியாலங்கள் மாத்திரம் (2) 24 மணித்தியாலங்கள் மாத்திரம்
(3) 36 மணித்தியாலங்கள் மாத்திரம் (4) 48 மணித்தியாலங்கள் மாத்திரம்

[பக். 3 ஐப் பார்க்க

Department of Examinations Sri Lanka
Department of Examinations Sri Lanka

20. வயது 18 மாதங்கள் பூர்த்தியாகும்போது பிள்ளைக்கு வழங்கப்படும் வக்சீன் மூலம் தடுக்கப்படும் ஒரு நோய்
(1) போலியோ (2) ருபெல்லா
(3) யப்பான் மூளைக்காய்ச்சல்(யப்பானிய என்சபலைட்டீஸ்) (4) சின்னமுத்து

21. முன்பிள்ளைப்பருவ பிள்ளையொருவரின் வளர்ச்சியின்போது காணக்கூடிய ஓர் இயல்பு
(1) குழந்தைப் பருவத்தை விட வளர்ச்சி துரிதமாக நடைபெறும்.
(2) என்புகளில் கல்சியப் படிவாக்கம் முறையாக நடைபெறும்.
(3) முண்டப் பகுதி மற்றும் அவயவங்களுக்குச் சார்பாக தலையின் விருத்தி வீதம் அதிகமாகும்.
(4) 25 பற்கள் அளவில் முளைத்திருக்கும்.

22. பிள்ளையின் உடல் விருத்தியில் தாக்கம் **செலுத்தாத** ஒரு காரணி
(1) முதிர்ச்சி (2) கற்றல் (3) பரம்பரை (4) சூழல்

23. முன்பிள்ளைப்பருவப் பிள்ளை ஒருவரால் காட்டப்படும் பிரச்சினைக்குரிய ஒரு நடத்தை
(1) இடதுக் கைப்பழக்கம் (2) பின்பற்றல் (3) கோபாவேசம் (4) பொறாமை

24. சில பிள்ளைகளில் காணக்கிடைக்கும் விரல் சூப்புதலைத் தவிர்ப்பதற்கு எடுக்கக்கூடிய ஒரு நடவடிக்கை
(1) மற்றவர்களோடு ஒப்பிட்டு வெட்கப்படவைத்தல்
(2) சூப்பி ஒன்றைச் சூப்புவதற்கு வாய்ப்பளித்தல்
(3) பிள்ளையின் அவதானத்தை வேறு விடயமொன்றுக்குத் திருப்புதல்
(4) விரல்களில் கசப்பான பதார்த்தமொன்றைப் பூசுதல்

25. முன்பிள்ளைப் பருவப் பிள்ளைகள் முதன்முறையாகச் சமூகத்தில் பழகவிடப்படும்போது வெளிக்காட்டும் ஓர் இயல்பு
(1) வெட்கத்தைக் காட்டுவர் (2) விளையாட்டுப்பொருள்களை மாற்றிக் கொள்ளுவர்.
(3) குழுவில் இருப்பதற்கு விரும்புவர். (4) மிகவும் செயற்றிறனுடன் உயிர்ப்பாக இருப்பர்.

26. பின்வருவனவற்றுள் முன்பிள்ளைப்பருவப் பிள்ளையொருவரின் கண், கை ஆகியவற்றின் ஒழுங்கிணைப்புக்கு மிகவும் சாதகமான செயற்பாடு எது?
(1) சுயாதீனமாக வரைதல் (2) கடதாசி துண்டுகளை உருண்டையாக்குதல்
(3) களியினால் வனைதல் (4) போத்தல்களில் நீர் நிரப்புதல்

27. கட்டிளமைப் பருவப் பிள்ளைகளின் பொதுவான இயல்பொன்று **அல்லாதது**
(1) முனைப்பாக இருப்பதற்கான விருப்பம் (2) ஆக்கிரமிப்புத் தன்மை
(3) எதிர்பாலினரிடத்தில் ஈர்ப்பு (4) சுயாதீனமாக இருப்பதற்கு உள்ள விருப்பம்

28. சோம் தைத்தலை
(1) இரு விசுப்பத் தையல்களுடன் ஆரம்பித்தல் வேண்டும்.
(2) வலப்பக்கத்திலிருந்து ஆரம்பித்து நூல் முடிவிடத்தை மறைத்து சாய்ந்த தையல்களைப் பயன்படுத்துதல் வேண்டும்.
(3) முடிச்சொன்று இட்டு முடித்தல் வேண்டும்.
(4) பிழையான பக்கத்தில் இரு விசுப்பத்தையல்களை இட்டு முடித்தல் வேண்டும்.

29. அடிப்படை மாதிரியுருவின் துணையுடன் குழந்தை ஆடையொன்றை வெட்டும்போது மாணவியொருவர் பின்பற்றிய சில படிமுறைகள் கீழே தரப்பட்டுள்ளன. இதில் **தவறான** படிமுறை எது?
(1) அடிப்படை மாதிரியுருவை நீளப்பாடாகத் துணியின் பாவுத்திசைக்குச் சமாந்தரமாக வைத்தல்
(2) அடிப்படை மாதிரியுருவைத் துணியின் மீது வைத்துக் குண்டூசிகளைக் குத்துதல்
(3) மாதிரியுருவுடன் துணியின் பகுதிகளை வெட்டி வேறாக்கல்
(4) காபன் தாளைத் துணிக்கும் மாதிரியுருவுக்கும் இடையே வைத்தல்

30. பொருத்தொன்றைத் தைத்து நேர்த்தியாக்குவதற்கு சிறுநூலோடித் தையல், சோம் தையல் ஆகியவற்றைப் பயன்படுத்தமுடியும். இப்பொருத்து யாது?
(1) எளிய பொருத்து (2) பிரான்சியப் பொருத்து (3) தட்டைப் பொருத்து (4) மேற்செறி பொருத்து

31. அப்ளிக் செய்வதற்குப் போன்றே அலங்கார தையல் முறை ஒன்றாகவும் பயன்படுத்தப்படும் ஒரு தையல்
(1) நரம்புத் தையல் (2) கம்பளித் தையல்
(3) தெறியோட்டைத் தையல் (4) மீன்முள்ளுத் தையல்

[பக். 4 ஐப் பார்க்க

Department of Examinations Sri Lanka
Department of Examinations Sri Lanka

32. சன்சூட் ஆடையில் பக்கத் திறப்பை இணைப்பியிடுவதற்குப் பொருத்தமான முறை
(1) கொளுக்கிகளும் கண்களும் பிடித்தல். (2) பொத்தான்கள் பிடித்தல்.
(3) ஓர் இணைப்பி (Zip) பிடித்தல். (4) அமுக்கத் தெறிகள் பிடித்தல்.

33. ஆடையை முதன்முதலாகக் கழுவிய பின்னர் சுருக்கமொன்றைக் காணக்கூடியதாக இருந்தது. இதற்கான காரணமாவது ஆடையை வெட்டுவதற்கு முன்னர்
(1) துணியின் கோணலை வெட்டி அகற்றாமை (2) துணியை அழுத்தாமை
(3) துணையை மூலைவிட்டத்தின் வழியே இழுக்காமை (4) துணியை நீரில் நனைக்காமை

34. இங்கு தரப்பட்ட வரிப்படம் காட்டுவது
(1) விளிம்புமுடித் தைத்தல்
(2) முகப்புத் துண்டு
(3) அலங்கார நுண்ணாடா
(4) உருவ முகப்புத் துண்டு

35. பின்வரும் ஆடை வடிவமைப்புகளில் ஒரு வயதுப் பெண் பிள்ளைக்கு மிகவும் பொருத்தமானது
(1) பொம்மற் கைகளுடனும் கழுத்துப்பட்டியுடனும் கூடிய பருத்தி ஆடை
(2) தளர்ச்சியான கைகளுடனும் கழுத்துப்பட்டியுடனும் கூடிய நைலோன் ஆடை
(3) பிற்பக்க இடுப்பு வரை தோள்பட்டிகளுடன் கூடிய இலினன் ஆடை
(4) கைக் குழைச்சடிகளைச் சூழவும் கழுத்தைச் சூழவும் பரவற் சுருக்குடன்கூடிய ரெயோன் ஆடை

36. மனை வளங்களின் வகைப்படுத்தலில் பௌதிகமல்லாத ஒரு வளம்
(1) எரிபொருள் (2) நேரம் (3) இடவசதி (4) நீர்

37. பின்வருவனவற்றுள் அறையொன்றுக்கு இயற்கை ஒளியைப் பெற்றுக்கொடுப்பதற்கு மிகவும் பொருத்தமானது எது?
(1) கூரையில் ஒளி ஊடுருவக்கூடிய கூரைத் தகடுகளைப் பயன்படுத்துதல்
(2) சுவரில் கண்ணாடியொன்றைப் பொருத்துதல்
(3) கூரையின் அமைப்புக்கேற்பப் பாவுகளை இடுதல்
(4) சுவர்களின் உயரத்தைக் கூட்டுதல்

38. பல வீடுகளை அவதானித்ததன் பின்னர் மாணவர்கள் முன்வைத்த சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன. இவற்றுள் சரியானது எது?
(1) வரவேற்பறைக்கு உயரமான யன்னல்களைப் பொருத்துதல்
(2) படுக்கையறையின் கதவு சாப்பாட்டறைக்குத் திறந்திருத்தல்
(3) வரவேற்பறைகளின் யன்னல்களுக்கு ஒளிகசியவிடும் கண்ணாடிகளைப் பொருத்துதல்
(4) சில குஷன் நாற்காலிகளை விறாந்தையில் இடுதல்

39. பின்வருவனவற்றுள் நேரமுகாமைத்துவத்துடன் **தொடர்புபடாத** கூற்று எது?
(1) ஒரு வேலையைச் செய்து கொண்டிருக்கும் போதே இன்னுமொரு வேலையில் ஈடுபடுதல்
(2) குடும்ப உறுப்பினர்களிடையே வேலையைப் பகிர்ந்தளித்தல்
(3) வேலைகளை இலகுவாக்கும் உபகரணங்களைப் பயன்படுத்துதல்
(4) குடும்ப உறுப்பினர்களின் விருப்பிற்கேற்ப நேரத்தை ஒதுக்குதல்

40. பின்வருவனவற்றுள் வீட்டில் துணையணிகளை இடப்படுத்தலுடன் தொடர்புபட்ட சரியான கூற்று எது?
(1) உயரத்தில் குறைந்த ஒரு துணையணியை மாடிப் படிக்கட்டின் அருகில் வைத்தல்.
(2) உலர் மலர் ஒழுங்கமைப்பொன்று இருண்ட மூலைக்குப் பொருத்தமானது.
(3) பெரிய படமொன்று வரவேற்பறையின் ஓரத்தில் வைக்கப்படுவதற்குப் பொருத்தமானது.
(4) சப்பாட்டு மேசை மீது வைப்பதற்கு மணம் வீசும் மலர்களைக் கொண்ட ஒழுங்கமைப்பு தெரிவுசெய்யப்பட்டது.

* *



Department of Examinations Sri Lanka
Department of Examinations Sri Lanka

සියලු ම හිමිකම් ඇවිරිණි / முழுப் பதிப்புரிமையுடையது / All Rights Reserved]

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

85 | T | I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

| | |
|---|---|
| ගෘහ ආර්ථික විද්‍යාව | I, II |
| மனைப் பொருளியல் | I, II |
| Home Economics | I, II |

## மனைப் பொருளியல் II

※ **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

**1.** பின்வரும் நிகழ்வை வாசித்து, தரப்பட்டுள்ள வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

சிறந்த முறையில் ஒழுங்கமைக்கப்பட்டிருக்கும் முன்பிள்ளை அபிவிருத்தி நிலையமொன்றில் பிள்ளைகளின் அபிவிருத்திக்கு பங்களிப்புச் செய்யும் வகையில் பல்வேறு செயற்பாடுகள் திட்டமிடப்பட்டுள்ளன. மு. ப. 10.00 மணி அளவில் எடுக்கப்படும் உணவுவேளை நிலையத்தின் மூலம் பிள்ளைகளுக்கு வழங்கப்படும். இதன்போது பிள்ளைகளின் விஷேட போசணைத் தேவைகளும் உணவுவேளைகளின் பாதுகாப்புத் தன்மையும் கவனத்திற் கொள்ளப்படும். இந்நிலையத்தின் மூலம் ஒரு நாள் சுற்றுலாவை மேற்கொண்டு பூங்காவொன்றைப் பார்வையிடச் செல்வதற்குத் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

(i) முன்பிள்ளைப்பருவப் பிள்ளைகளின் விஷேட போசணைத் தேவைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) மு.ப 10 மணியளவில் வழங்கும் உணவுவேளையின் பாதுகாப்புக்காக நிலையத்தின் மூலம் எடுக்கப்பட்டிருக்க வேண்டிய படிமுறைகள் **நான்கை** எழுதுக.

(iii) கரமல் புடிங்கும் வட்டிலப்பமும் முன்பிள்ளைப் பருவப் பிள்ளைகள் விரும்பும் சிற்றுணா வகைகள் இரண்டு ஆகும். இவ்வுணவு வகைகள் இரண்டையும் தயாரிப்பதற்குத் தேவையான பிரதான பதார்த்தங்கள் **இரண்டு** வீதம் குறிப்பிடுக.

(iv) சுற்றுலாவிலிருந்து வரும்போது மாலைத் தேநீருக்குப் பஸ்வண்டியினுள் உண்பதற்குப் பொருத்தமான உணவுப் பட்டியலொன்றை எழுதுக.

(v) பிள்ளைகளின் சீருடைக்காகப் பருத்தித் துணி தெரிவுசெய்யப்பட்டுள்ளது. அதற்கு ஏதுவான விடயங்கள் **இரண்டை** எழுதுக.

(vi) பிள்ளைகளின் சீருடையை நிர்மாணிக்கும்போது கருத்திற்கொள்ளப்பட வேண்டிய விடயங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(vii) பிள்ளைகளின் வெளிப்புற விளையாட்டுகளுக்காகப் பல்வேறு உபகரணங்கள் இந்த நிலையத்தில் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. அவ்வாறான உபகரணங்கள் **இரண்டைப்** பெயரிடுக.

(viii) பூங்காவைப் பார்வையிடச் செல்வதன் மூலம் பிள்ளைகள் பெற்றுக்கொள்ளக்கூடிய சூழல் அனுபவங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ix) இது போன்ற நிலையத்தின் கட்டடத்தை நிர்மாணிக்கும்போது சிறந்த காற்றோட்டத்தைப் பெற்றுக்கொள்வதற்கு எடுக்கப்பட வேண்டிய படிமுறைகள் **நான்கைக்** குறிப்பிடுக.

(x) வகுப்பறையில் பிள்ளைகளுக்காகத் தளபாடங்களை ஒழுங்கமைக்கும்போது கவனத்திற் கொள்ள வேண்டிய விடயங்கள் **நான்கை** எழுதுக.

**2.** (i) குழந்தை ஆடையொன்றை (baby shirt) அலங்கரிப்பதற்குப் பொருத்தமான எம்ப்ரொய்டரி அலங்காரத்தை வரைக.

(ii) இந்தக் குழந்தை ஆடையின் கழுத்தையும் கைக்குழைச்சடியையும் தைத்து நேர்த்திசெய்யக்கூடிய முறைகள் **மூன்றை** எழுதுக.

[பக். 6 ஐப் பார்க்க

Department of Examinations Sri Lanka

(iii) சன்சூட் ஆடையொன்றின் கால்களைச் சுற்றித் தைத்து நேர்த்திசெய்வதற்கு முகப்புத் துண்டு அல்லது உருவ முகப்புத் துண்டு வைத்துத் தைக்கலாம்.

இவற்றுள் ஒரு முறையைப் பயன்படுத்தி,

(a) பட்டிகளைத் தயார்ப்படுத்தும்போதும்

(b) சன்சூட் ஆடையின் கால்களைச் சுற்றித் தைத்து நேர்த்திச் செய்யும்போதும்

பின்பற்றப்படும் செயன்முறையை விவரிக்க.

3. (i) (a) உணவுக் கூம்பகத்தில் கீழே உள்ள பகுதியில் அடங்கியுள்ள உணவுப் பொருள்கள் **இரண்டைப்** பெயரிடுக.

(b) இவ்வுணவுப் பொருள்களில் அடங்கியுள்ள பிரதான போசணைப் பொருள்களின் தொழில்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) உடலில் நீரினால் செய்யப்படும் தொழில்கள் **மூன்றை** எழுதுக.

(iii) (a) பின்வரும் உணவு வகைகளைத் தயாரிக்கும்போது பயன்படுத்தப்படும் சமையல் முறைகளை முறையே பெயரிடுக.

- இடியப்பம்
- கொக்கிஸ்
- மீன்பணிஸ்

(b) மேலே (a) இல் குறிப்பிட்ட முறைகளில் ஒரு சமையல் முறையை விளக்குக.

4. (i) 'குறைபாட்டு நோய்' என்பதை இனங்காண்க.

(ii) குருதிச்சோகை இலங்கையில் காணப்படும் ஒரு போசணைப் பிரச்சினையாகும். இந்த நோய் நிலைமைக்கு ஏதுவான **மூன்று** விடயங்களை விளக்குக.

(iii) "கட்டிளமைப் பருவத்தினர் அநேகமாக நலமற்ற உணவுக்கோலங்களைப் பின்பற்றுவர்." கலந்துரையாடுக.

5. (i) 'விரிந்த குடும்பம்' என்பதை இனங்காண்க.

(ii) குடும்பமொன்றின் வாழ்க்கை வட்டத்தின் பருவங்களைப் பெயரிடுக. அதில் ஒரு பருவத்தை விளக்குக.

(iii) "வீட்டின் பௌதிக ஒழுங்கமைப்பின்போது அறைகளின் அமைப்பு பற்றிக் கருத்திற் கொள்ளுதல் முக்கியமானது." கலந்துரையாடுக.

6. (i) பிள்ளைக்கு 2, 4, 6 மாத முடிவில் வழங்கப்படும் ஐவலுவுள்ள வக்சீன் (pentavalent vaccine) மூலம் தவிர்க்கப்படக்கூடிய நோய்களைப் பெயரிடுக.

(ii) முன்பிள்ளைப் பருவத்திலுள்ள சில பிள்ளைகள் இரவில் 'படுக்கையை நனைக்கும்.' இதற்கு ஏதுவான விடயங்கள் **மூன்றை** விளக்குக.

(iii) முன்பிள்ளை அபிவிருத்தி நிலையங்கள் மூலம் பிள்ளைகளின் அறிவு விருத்திக்காகத் திட்டமிடப்பட்டுள்ள செயற்பாடுகள் **நான்கை** விவரிக்குக.

7. (i) குறிப்பெழுதுக.

(a) நுகம்

(b) முதிர் மூலவுருப்பை (அமினியன் பை)

(ii) கட்டிளமைப் பருவத்தினரின் சமூக விருத்திக்குப் பாடசாலை எவ்வாறு உதவும் என்பதை விளக்குக.

(iii) "பூப்படைதலின்போது ஏற்படும் பல்வேறு மாற்றங்கள் சில பிள்ளைகளில் பிரச்சினைக்குரிய நிலைமைகளை உருவாக்கும்." உதாரணங்களைத் தந்து கலந்துரையாடுக.

* * *

Department of Examinations Sri Lanka
Department of Examinations Sri Lanka